ஓம்

பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீ சங்கரபூஜ்ய பகவத்பாத

ஆசாரிய சுவாமிகளின் முக்கிய

சீடருளொருவராகிய

ஸ்ரீ தோடகாசிரியர்

தேவவாணியிற் றிருவாய்மலர்ந்தருளிய

# தோடக மென்னும்

# வேதசார சமுத்தரணம்.

இது

சமிவன க்ஷேத்திரமென்னும்

ஸ்ரீ கோவிலூர் மடாலயம் ஸ்ரீமத் முத்திராமலிங்க

தேசிகராதீனத்திற்குரிய

ஸ்ரீ வீரசேகர ஞானதேசிகர் பாதசேகரரான

ஸ்ரீ சுப்பைய்ய சுவாமிகளவர்களால்

செய்யுள் வடிவமாகத்

தமிழில் மொழி பெயர்க்கப் பட்டு.

சென்னை, கோமளேசுவரன்பேட்டை,

சச்சிதானந்த அச்சியந்திர சாலையிற்

பதிப்பிக்கப் பட்டது.



[விலை 1909. 4 அணா]

ஓம்

பரப்பிரஹ்மணே நம:.

# பிழை திருத்தம்.

—∞:•:∞—

| பிழை | பக்கம். | திருத்தம். | பாட்டு. |
|---|---|---|---|
| ரதீன | | ராதீன உள்டைடில் | |
| ளாதிபபோல் | 6 | ளாதியபோல் | 17 |
| விருத்திபதே | 6 | விருத்தியதே | 19 |
| கூணிபா | 7 | 'குணிபா | 25 |
| தாகிபை | 11 | தாகியை | 44 |
| பணைடவன்முன் | 11 | யிவனின்முன் | 48 |
| ணீமென் | 12 | ணீயென் | 51 |
| வணைடவனெனவே | 15 | விவனின்னெனவே | 68 |
| யணைடதுவனென் | 20 | யிவனினதென் | 92 |
| மாசுரிபை | 28 | மாசுரியை | 142 |

—∞:•:∞—

ஓம்

பரப்பிரஹ்மணேநம:.

ஸ்ரீ சங்கரபூஜ்ய பகவத்பாத

ஆசாரிய சுவாமிகளின் முக்கிய

சிடரு ளொருவராகிய

ஸ்ரீ தோடகா சிரியர்

தேவவாணியிற் றிருவாய்மலர்ந்தருளிய

## தோடக மென்னும்

# வேதசார சமுத்தரணம்.

-----

இது

சமிவன க்ஷேத்திரமென்னும்

ஸ்ரீ கோவிலூர் மடாலயம்

ஸ்ரீமது முத்திராமலிங்க தேசிக ரதினத்திற்குரிய

ஸ்ரீ வீரசேகரஞான தேசிகர் பாதசேகராகிய

ஸ்ரீ சுப்பைய்ய சுவாமிகளவர்களால்

செய்யுள் வடிவமாகத்

தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு,

சென்னை, ஹிந்துதியலாஜிகல் ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதர்

கோ. வடிவேலு செட்டியா ரவர்களாலும்

மங்கலம். சண்முக முதலியா ரவர்களாலும்

சென்னை, கோமளேசுவரன் பேட்டை

சச்சிதானந்த அச்சியந்திர சாலையிற்

பதிப்பிக்கப் பட்டது.





[விலை 1909 4 அணா]

ஓம்

பரப்ரஹ்மணேநம:-

# உபோத்காதம்.

—oo:※:oo—

அநந்தகல்யாண குணங்கள் நிறைந்த மகாதேவரது அனுக்கிரக லீலாவிக்கிரகமாகிய ஸ்ரீசங்கரபூஜ்ய பகவத்பாத ஆசாரிய சுவாமிகள் அஸ்தாமலகரென்னும் நாமம் வாய்ந்த சீடனைத் தமக்கடிமையாக்கியபின் பதுமபாதாதி சீடத் திருக்கூட்டங்களோடு ஒருகால் சிருங்ககிரியென்னும் புரியில் ஸ்ரீ சாரதாம்பிகையைப் பூஜித்துக்கொண் டிருக்குங்காலத்தில் தமது தருமத்தில் வழுவாது நடப்பவரும் ஜீவகாருண்யமே உருவானவரும், அதிவிநயரும், தேசிகசேவையிற் றற்பரும், மிகுந்த சமாகிதசித்தருமாய ஆனந்தகிரியென்னும் நாமம்வாய்ந்த ஒருவர் அத்வைதஸ்தாபனாசிரியராகிய ஸ்ரீ ஜகத்குரு சந்நிதியைச் சரணாகதியாயடைந்து ஊசிசெல்வழிநூற்செல்வதுபோலவும், கட்கிமைபோலவும், உடற்குயிர்போலவும் அனவரதம் ஆத்தம் அங்கம் தானம் சற்பாவம் என்னும் நான்குவிதப் பணிவிடைகளையும் அளவில்லாத அன்போடு செய்துவந்தனர். அக்கால், சாஸ்திரங்களிற் பிரவிருத்தி சிறிதுமின்றிக் கேவலம் சேவையிலேயே அன்புபூண்ட அவ்வன்பரை தயாநிதியாய் மான்மழு வொழித்து மறைமுதற்பொருளை யுணர்த்திவந்த விறைவர் தமது திருவுளத்தடைத்துப் பதுமபாதாதி முனிவர்கள் சாந்திபாடமாகிய சிரவணஞ் செய்யும்பொழுது தமது திருவார்த்தையைச் சிரவணித்துய்யுமாறு கருணை புரிந்தனர். இங்ஙனம் நடந்துவருநாளன்று அவ்வன்பர்

ஒரோர்காற் றமது தேசிகேந்திரர் சேவைமுடியா திருப்பிற் சிறிது பொறுத்து வருவார். அவ்வக்கால் உலகநாயகராகிய குரவர் பெருமான் சாந்திபாடஞ் செய்பவரை நோக்கிச் சிறிது பொறுங்கள்; கிரி சிறிதுபோதில் வந்துவிடுவன்; பின்னர்ச் சிரவணஞ் செய்யலாமென்று திருவாய்மலர்ந்தருளுவார். அதுகுறித்துச் சர்வவித்யா சம்பன்னராகிய பதுமபாதாதி முனிவர் மனங்கள் தபித்துக்கொண்டே வந்தன.

சிறிதுநாட்கழித்து ஒருநாள் அவர் தேசிகர் பெருமான் பரிவட்டம் சுத்தஞ்செய்ய நதிக்குச் சென்றிருக்குங்கால் சாந்திபாடஞ் செய்யச் சகஸ்திரக் கணக்காகச் சீடர்கூடி யிருக்கச் சாந்திபாடம் நடக்க ஆக்ஞைபுரியவேண்டுமென்று குரவர் பெருமானைப் பதுமபாதமுனிவர் பிரார்த்தித்தபொழுது அவர் வாராமலிருக்கச், சிறிதுபொறுங்கள் கிரியும் கணட்போதில்வந்து விடுவன் என்று தேசிகேந்திரர் திருவாய் மலர்ந்தருளினர். அதைச்செவியுற்ற பதுமபாதமுனிவர் சகியாதவராகிச் சாஸ்திரத்திலனதிகாரியாய்க் குட்டியம்போலச் சடமாய்ப் புத்திஹீனனாய்த் தன் வேலையைச் செய்துகொண்டிருக்கும் அவனுக்காக ஏன் எதிர்பார்க்க வேண்டுமென்று பீதியோடுந் தெரிவிக்க; அதைத் திருச்செவியுற்ற தயாசமுத்திரமாகிய தேசிகர் பெருமான் பதுமபாதரது மிகுந்த கர்வம் நீங்கும்பொருட்டும் பக்தர்கள்பால் அனுக்கிரகத்தை வெளியிடும் பொருட்டும் தமது அன்பனாகிய கிரியின்பால் சதுர்த்தசவித்தைகளும் உளவாமாறு திருவுளத்திலக்கணமே கருணைபுரிந்தருளினர். குருபரன்றிருவருளால் அவ்வித்தைகளைப் பூரணமாகப் பெற்ற அவ்வன்பர் பாதங்கடோறும் நான்கு சகணங்கள் வாய்ந்த தோடகசந்தத்தால் மறைமுடியாவையுந் தொகுத்துச் சுருதிசார சமுத்தரணம் என நாமஞ்சூட்டி இந்நூலைச் சகந்நாயகனாகிய தேசிகர் பெருமான் திருவடியிற் சமர்ப்பித்தனர். அதன் சொற்பொருளமைதியையும் தேசிகன் சேவையின்வலியால் விரைவில் இவ்வாறு இயற்றியதையும் பத்மபாதர் கண்ணுற்று தமது கர்வத்தை விடுத்துப் பொறுத்தருளுமாறு ஸ்ரீசங்கரமுனிவர் திருவடித் தாமரையில் விழுந்து அனேகங்கோடி நமஸ்காரம் செய்தனர். கருணையே திருவுருவமாய எமதுயிர்க்கிறைவர் அதனை அவ்வாறே பொறுத்தருளினர் என்பது சங்கரதிக்விஜயத்தின்கண்ணுள்ள இந்நூலவதரித்த சரித்திரத்தின் சங்கிரகமாம்.

இத்தகைய அருமையும் அருளும் வாய்ந்த நூல் தேவவாணி யுணர்ந்தார்க்கே யன்றித் தமிழ்மக்களுக்குப் பயன்படாமை கருதி ஸ்ரீ கோவிலூர் மடாலயபதியாய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீமது வீரசேகரஞானதேசிகர் பாதசேகரராகிய ஸ்ரீ சிப்பைய்ய சுவாமிகளவர்களால் தமிழிற் செய்யுள்வடிவமாக மொழி பெயர்க்கப்பட்டு வெளியிடப்பட்டது.

15-2-09.

ஓம்
பரப்ரஹ்மணேநம:.

# தோடக மென்னும்
# வேதசார சமுத்தரணம்.

## பாயிரம்.

### வன்னி விநாயகர் துதி.

மங்கல வுருவ னாகி மருவுதற் கரிய னாகிச்
சங்கையி றுரியா தீதந் தனிலொளி ரொளிய தாகி
யெங்கணற் குர்வ னாகி யின்பமே யீயும் வன்னி
யைங்கா விறைவன் பொற்று ளனுதினம் போற்று வா
[மால். 1

### பஞ்சமூர்த்திகள் வணக்கம்.

மறைநெறி யொழுகு மருந்தவர்க் கருளும் வன்னி யைங் கரனைமா வடிவே, லுறைதிருக் கரனை மதுமு னிக் கருளு முயர்திரி புவனநா யகனை, நிறைதரு கருணை நிலயம தாகி நிகழ்திரி புவனநா யகியை, சிறை யறுத் தருளும் விரமா தவனைத் தினம்பணிந் திடரொ ழித் திடுவாம். 2

### சங்காபூஜ்ய பகவத்பாதாசாரிய சுவாமிகள் வணக்கம்.

பெண்மை பாதிய னென்பெயர் பெயர்க்கவோ விடத்தை, யுண்மை யார்கள னென்பதை யொழிக் கவோ வுலகில், வெண்மை மாமலை விட்டொரு விரத் தனைப் போந்தே, தண்மை யேதருஞ் சங்கர முனிவ னைப் பணிவாம். 3

### பத்மபாதாதி நால்வர் வணக்கம்.

கங்கையிற் கமல மீது கதிசெயுங் கழலி னனைப்
புங்கவ ரீச னன புனிதனைக் குரவன் பாத

பங்கய வருளாற் பாடும் பரமனைப் பெருமை வாய்ந்த
வங்கையா மலக னென்னு மமலனைப் பணிகு வாமே. 4

பரமகுரவர் வணக்கம்.

முடிமறை யறையு மெமையெமக் கருளு முத்திரா மேசதே சிகனைத், தடியிடை யுடையர் துரும்பென வருளுந் தகளறு துறவிறை யவனைச், சடையிறை யடியின் மனமுற வருளுஞ் சத்தறி வம்பரா ரியனைத், திடமுடன் மனத்திற் சிந்தைசந் ததமுந் திகழ்தரப் புரிந் திரு ளிரிப்பாம். 5

அருளிறை வணக்கம்.

சீர சாகரஞ் சிறிதெனக் கருணையிற் சிறந்த
நாச சேகர னருள்கரி முகனமக் குறுஞ்சம்
சார சாகரந் தணந்திடச் சமிவனந் தனிலாம்
வீர சேகர முனிவரன் மிளிர்பதந் தொழுவாம். 6

அவையடக்கம்.

சங்கரதே சிகனருளா லறையுமறைச் சாரசமுத் தரண மான, விங்கிதனைத் தமிழ்மொழியி லெளியனேன் யாத்திடுக விதயத் தோரல், பொங்கரவி னிறைதனதாயிரமுகத்தா லரன்புகழைப் புகழ நோக்கி, யிங்கொருபுன் கிருமியதை நிகர்புகழ விதயமுன விணையதாமே. 7

நூற்றேகையுங் கூறுவான் றுணிந்தவேட்கையும்.

இவ்வெழி லெழுத நூலை யிருசதத் தொருபத் தின்றுஞ், செவ்விய செய்யு ளாலே சிறியனுஞ் செப்பலு னு, மெவ்விதத் தினுமென் சிந்தை யின்பறி வுருவில் வாழ, வவ்வித மலது வேறொ ராசையைப் பற்றி யன்றல். 8

பாயிரம் முற்றிற்று.

# நூல்.

## விஷ்ணு வியாச பரமானந்தி.

மூவுல கிறையா மரியினை முனிவர் தொழுவனை முதிர்ந்தசத் துவனை, மேவருஞ் சத்தி தனயனற் சுதனை மிளிர்பர மேட்டியிட் டினனைத், தூவுகொண் மூவி லம் லகம் புரையு முருவனை வசிட்டதூய் குலனைச், சிவனா ய்கனை யுக்கிர தவனைச் சிந்தையிற் றினம்பணிந் திடு வாம். 1

சகல லோகமுந் தொழிலினிற் சனித்திடு மதனாற்
புகலு நாசம துறுமெனப் புந்தியு மோர்ந்தே
யகல லாயில தைதத்தொழி லாலுற லரிதென்
றகில மீதினின் றடைந்தனன் விரத்தியை யொருவன்.

அவிநாசி பதம்மறி வேட்கையனு யழகார்ந்த வாநெறி மேவினனோர், தவமாயதி யாநெறி மேயுள னாய்த் தனதுண்மை யுணர்ந்தவ னையருநாற், கவியா கிய சற்குரு வைச்சரணு கதியாக வடைந்தெழு மன் புடனே, புவிமீது பணிந்துபணிந் தழுதே பொருதன் குறை நின்று புகன்றனனே. 3

பகமென்ப தடைந்த பராபரனே பவமோடு பிறப் பெனு நீருள தாய்ச், சுகதுன்ப மெனுந்திரை யார்கர லைச் சுழல்விழ்ந்து வருந்தி யிருந்தவனாய், மகியின்புறு நின்பத மேயடையோர் மருவுங்கதி யின்றிய நாயி னையே, மிகுமன்பத னலினி தாட்கொடு நீ மிளிரார்கலி நின்று மெடுத்தருளே. 4

விடம மாம்விட யந்தனின் வேட்கையை விடுத்தே
யுடலே யானெனு முளமொழித் துயர்பர வொளியிற்

றிடம தாய்நிட்டை யடைந்தனு தினம்பர மான்ம
நெடுவிஞ் ஞானங்கொண் டவித்தைகா ரியமய னீப்
[பாய். 5

பஞ்ச கோசத்தில் யானென தென்னவே படரு
நெஞ்சை நீத்தெந்த ஞான்றுநிர்க் குணவறி வுருவாய்
நெஞ்சி லேயிலங் கனந்தசத் தியவொரு நிறைவை
யஞ்சி டாதன வரதமு மகமென வறிநீ. 6

நீர்பேதம் பன்மையினை யினன்றனக்கு நிகழ்த்தியிடு
நீர்மை போலு, மார்குடங்க ளாதிபன்மை யம்பரத்திற்
காற்றியிடு மதனைப் போலுஞ், சீர்சருவ காலமவி கார
மெனச் செறிநின து மதிச்சான் றிற்கே, யோர்மதியின்
பேதமது பன்மையினை யியற்றுமென விதயத் தோர்
வாய். 7

சூரிய னொளியை யொப்பச் சுயம்பிர காச மாகி
யேரவி காரி யாகி யிருக்குமுன் னுமெஞ் ஞான்றுஞ்
சீருல கினர்தஞ் சித்த சரிதத்தைத் தெரித லாலே
யாரசம் சாரி யென்றே யறிகுதி மைந்த னேநீ. 8

விடயங்க ளவற்றுற் புந்தி விரும்பியே யுபரா கத்தை
விடயநிச் சயத்தை யாற்றி விளக்கிடு மதனு லேயே
விடயங்கன் மதியி னுக்கு விளங்கிடும் விளங்கா வாகு
மடர்பரி ணமி யாகு மாதலாற் புந்தி மைந்தா. 9

மதிவி ருத்திகள் சந்தத மலருந்தன் னொளியா
லதனி னுலவி காரியிவ் வான்மால் லொளியும்
விதமு றும்பரி ணமிய தாகுமேல் விரியிம்
மதிவி ருத்திகண் ஞாதவஞ் ஞாதமாய் மலரும். 01

பரிசுத்த வறிவா முன்னுற் பகலிர வுளத்திற் பாயுஞ், சரிதங்க ளெவையுங் காணுந் தகைமையா மதனி னூனே, யெரிபுத்திப் பகுப்ப தான வியல்பு னக் கிலதெப் போது, முரமந்த வேது வாலே யொப் பிலா யுளத்தி னூடே. 11

விடயமது தமின்விடயத் தன்மையது மெவ்வகை யால் வெளிய தாகுந், திடமதிகடமின்மாட்டுமையமின் றித் திருசியத்வஞ் சித்த மாகு, நெடியவிது வெதனு லிங் கதனூனே நிகழ்மதியின் விருத்தி யாவும், படர்விட யத் தன்மைபதாற் குடமாதி கடுப்பப்பர விடய மாமே.

அன்னியமா மதனினு லனவரத மெதனினு லறிவ தாகுந், தன்னியல்பை யதனினு லறியாத தன்மைய திவ் விடயம் யாது, மின்னவகை யன்னியத்தா லிவ்வு ளங்க ளிலங்கியிடு மியல்பி னூலே, தன்னியல்பை யறி யாத தன்மையதாஞ் சகவிடய மவைகள் போன்றே.

அனவரதம் விவகார தசையதனில் விடயவா கார மாகி, மனும்விருத்தி யொருவகையாய் மனந்தனக்கு மருவுமதை விடய மாக்கி, நனியகமென் றுன்னுமற்ற விதமாயும் விருத்தியொன்று நணுக லாகுந், தனதொ ளியி லிலங்கலான் மதிதருமந் தனக்கிலையென் றுளத்தி லோர்வாய். 14

நனதி னியல்பான் மனத்தினுடைத் தனது குணமா யினும்புருடன், றனது தரும மெனப்பிறங்கு மெதனு லதனுற் றூனினன், மனதின் விருத்தி யிது தனேயே மடமை மிகுத்த மகியோர்கள், பினம தில்லா வான்மதுண மெனவே பிறழ்ந்திங் கறிகுவரால். 15

உலகினர் தமைமோ கிக்கு முயரதற் பவித்தி
டாதேயு லகரித் தொழில்க ளொன்று மனுபவித் திட
லிலா னாதே, யிலகது வான்ம தன்ம மெனக்கொள
லிலதெனு ஞான்று, பலவிட யானு போகப் பயனில
தாமக் காலே. 16

மனந்தனக்கு விடயவுரு விருத்தியொரு வித
மாயே மருவு மாயி, னுனுங்குடங்கள் முதலியன
வொப்பாகு முளவிருத்தி யதனை நாடிப், பனும்புரு
டன் றனதுணர்வும் பரிணாம மதனையே பற்று தாயின்,
மனுங்குடங்க ளாதிபோல் விருத்தியதே மருவுமென
மதித்தி டாயே. 17

அறிவானு மறிபொருளு மாகியநல் லான்மாவும்
புந்தி தானுஞ், செறியாதென் னபிமான மதுவாத லில
தாகித் திதிய தாங்காற், றிறமான வபிமான வழித்
தாய விவகாரந் திகழ்வ தான, நெறியிதை யொரு
ஞான்று முலகினுள நிகிலருமே மருவி டாரே. 18

நோக்குகின்றேன் யானென்ன முன்னநண் மதியி
னுன்னி, நோக்கிடும் விழியைப் பின்னர் விடயத்தி
னுழைவித் தாற்போற், கேட்குத லாதியான கிளர்
வெளி யாதி யின்ற, னீக்கருங் குணங்க ளூடு நிலைமை
யித் தகையே யன்றோ. 19

ஒருவரு மகங்கா ரத்தை விடுத்தொரு பொழு
துஞ் செய்யு, மருவிவ காரந்தன்னை யடைந்திட லகி
லத் தின்றாந், தெரிதரிவ் வேது வாலே திகழ்விவ கார
மார்க்க, மருவிட வேதுத் தன்மை மதிக்குறுந் திடம
தாயே. 20

கித்துரு வுயிர்க்குணமோ திகழ்மதிக் குணமோ வன்றி
மெத்திரண் டின்குணமோ மேவுமிவ் வகங்கா ரம்மென்
றுத்திக ளோடும் விட துறவொரு மயல தில்லா
வெத்தன சிலராலே யிதுநன் குளத்தாற் காண்க. 21

குணம தாகிற் புருடனுக்குக் குறைவு புரியு மகங்காரங், குணம தாக வொருபொழுதும் விடய மாதல் கூடாதாங், குணம தான தருங்குணியைக் குணியின் குறைவில் லவயவத்தைத், துணிவ தாய்விட் டன்னிய மாய்த் துலங்கி யிடுத லிலதாலே. 22

குணிக்குக் குணத்தி னதுபேதங் குறிக்கி லொருவத் துவினுலு, மணிசெய் தேச மதனுலு மாத லில்திங் காதலினுற், குணியி லிருக்குங் குணங்குணியாற் குணியின் குணத்தா லாயினுமே, யனுவ தேனும் விடய மது வாவ திலையென் பதுதுணிபே. 23

அனவிடத் திருப்பதாய வனற்குண மொன்றற்கொன்று, தனிவிட யமதாந் தன்மை சார்ந்திட லிலதெக் காலுந், தனதுகண் ணுள குணத்தைத் தன்குணமதனுற் பூவி, லனலதும் விடய மாக வாற்றிடும் வளனதின்றே. 24

அநித்த மாம னன்மகுண மாகுங் குணத்தி னீட்டமெதைச், சனித்த வில்லா வான்மகுண மாகச் சாற்றுங் கணுதமுனி, தொனித்த நெறியா லதுதனையுந் துடைத்து விடுத றாய்மையதா, மநித்த குணத்தா னித்தமதுங் குணியா யிடுத லனுகாதே. 25

அம்பரந் தனக்குச் சனித்தலை மறைக ளளவறு முறைபறை தலினு, லம்பர மநித்த மாகுமென் றறிக

வருங்கண புக்கின்மா மதத்திற், பம்பிய வசித்த குண நித்தப் பொருளைப் பயிற்றிடக் குணியதே யாக, வம் பர மதனை யலதொரு வுவமை யறைந்திடற் கில்லையே யாமால். 26

மனமொடு புருட னேனுமப் புருட னவனொடு மனமது வேனுங், கனமுச லமொடு ககனம தேனுங் கம்மொடு முசலம தேனு, மனுகல யோகம் வியோகம தேனு மருவிடலில்லையிவ ணைதனுற், பனுமவ யவித்வ மவைகட்கு நீக்கப் பட்டுள தாதலின் மாதோ. 27

உலகினிற் பழுதை குடமுத லனசா வயவங்க ளொன்றினே டொன்று, யிலகிடக் கூடு மியல்புள வி து திருட்டமற் றிதனையே யிணையா, யலகிலித் திரு ட்ட மதைவிடாப் புருட னலதி ருட்டமா மதையுங், கலகமில் கருத்திற் சுயமதாய்க் கருதிக் கறைபறவிருத் தலு முரித்தே. 28

அவயவப் பொருளு மவபவ மிலதா மவையொடு மவயவ மிலது, மவயவப் பொருளா மவையொடும் யோக மதுவில தாகுமே யதுதான், புவியினிற் றிருட் ட மெதனிலு விவணம் பொருந்திடு மதனினு ளுமுன், செவியுறக் கூறு மது மிகத் திதமா மென்றுசிந் தையின றிந் திடுநீ. 29

அவயவ மில்லா வெல்லா வரும்பொரு டமக்கா ரோப வவயவ விடத்தில் யோக மணுகுவ திலதெக் காலும் புவியிற்கற் பிதம தான பொருளினி னிலைமை யாக வவமுறும் பொய்யாம் புந்தி யதிதிட மாத லாலே. 30

மறைமுடி மதத்தில் வேத மருமம தறிந்த மேலோ ருறுமுல கெவைக்கு மூல மாகியுள் ளுணர்வே மெய்யா

யறையொரு பரம வான்ம பதத்தைநித் தியம தாயே
மறைமுடி யதனிற் சொல்வர் மற்றதை யநித்த மாயே.

நண்ணுமத ஞானமே தருக்கருக்கு நாசகுண
நழுவா வத்து,திண்ணமது வாகவொரு திருட்டாந்தஞ்
சிறிதேனுஞ் செறிவ தின்றும், வண்ணமது வாகயாம்
வழங்கியதே வண்மையா மதனினனே, யெண்ணுநித்த
மநித்தகுண மதனுமே குணியாவ திலதெக் காலும்.

அறிவுருவின் குணமாத லெதனினு லன்றுகு மக
ங்கா ரந்தான், றிறவிடய மதுவாதற் குரியதாய்த் திக
ழுமிகழ் விடயா கிர்தி, யறவிளக்கு மதியினது குணம்
போன்றவ் வகங்கார மதற்கு மேலோய், செறிவிடயத்
தன்மையுள தாதலினற் றிருக்கினது குணம தாமோ.

விடயந்தன துருவொன்றிடும் விரிபுந்தியின் குண
மொன், றிடர்புந்தியி னதுவாமகந் தையதொன்றிரண்
டனையுந், தடையொன்றற வறியும்மெவ னவிகாரசற்
புருடன், றிடமிங்கிவன் சிவனுமெனத் தெளிவாயறை
குவமால். 34

அற்றேலுட லகமாயுழ லறிவினனை யெவணஞ்
சொற்றீர்பரமான்மாவெனச் சொலுவோமெனவினவிற்
கற்றோய்கச டறுமாறிது குறைவேகழ றிலம்யா
நற்றாய்மறை யதுவும்பொரு ளிதையேநவில் வதனல்.

கருதுதற் கரியன் கருத்தினுக் கிலைநற் கருதுதற்
கல்லனு யெனவோர், திருவது விதுவோ டெதுபர மத
னிற் றிகழது வேயொரு வனெனச், சுருதிக ளிவற்றிற்
றிருக்கிது தனச்குத் தூய்பர மான்மமெய்ப் பதமாம்,
வருமொரு பான்மை விரிவது வாக வழங்கிடப் படு
மென மதியே. 36

எதுவெந்த ஞான்றும் வாக்கா லிசைத்திடற் கில்லாதாகு, மெதுவெந்த ஞான்று நோக்கா னோக்கிடற் கில்லாதாகு, மெதுவெந்த ஞான்றுங் காதாற் கேட்ப தற் கில்லாதாகு, மெதுவெந்த ஞான்று நெஞ்சாலெண் ணிடற் கில்லா தாகும். 37

வாக்கொடு நயன மாங்கே வண்செவி மனமுந்தா மும், போக்கறு மெதனினுனே பொலிந்துசென் றிடு மெப்போது,நீக்கமில் பரமமான பதமதே நீதானென்ன நோக்குதி யெனவே வேத நுவன்றதிங் கதி காரிக்கே.

மறையிவை பரம வான்மமெய்ப்பதத்தின் மானம தாகச்சிற் சிலவே, யறைதரலாய வெம்மினு லீண்டு வருமணி மாதிய குணமா, ரறிவுரு வான சத்தெனப் பூர்வ மறைநிடு மதுவட்டற் கரிநீ, செறிதர வாகு வா யென வரிய திருமறை முடியறைந் திடுமே. 39

எவ்வணங் குடங்க ளாதி யிடமிரு விசும்பி னுக்குச் செவ்வவ யவம்வி காரஞ் செறிந்திடல் சிறிது மின்று மவ்வணம் பிரமத் திற்கிவ் வாருயி ரவய வத்தோ டெவ்விகாரமதுமின்றுமெனுமொழி யமித்தைபாமே.

கரகாதி நிமித்தமத னுலேயே யெவ்வாறு ககனத் திற்குக், கரகாம்ப ரமதுவெனப் பெயர்குலவு மவ்வா றே கரிய தாகிப், பரமான்ம வறிவான சிவத்தி னுக் கும் படிமீது படரு நாமம், புரவேது வதனுலே சிவ னெனப் புகல்வதலாற் பொருந்து ருதே. 41

அக்கரம் பரம வான்மசத் தெனவே யறைதிரு நாமமா ரெதனு, லிக்கக ணுதி சகமியற் றிடுத லிடையு ப்பின் றன்னதாற் றலினுற், கக்கிய வுலகிற் புக்கிடு மவ னே கடமிவ் வுதயமா யினபின், போக்குறு முடத்திற் புக்கட்ட கரம்போற் புந்தியின் வைமந்தனே சொலுநீ.

அம்பர முதல வாயவிச் சகங்க ளரும்பர மான்ம
னி னிருந்தே, பம்பிடு மெனவெச் சுருதியின் முடிகள்
பகர்ந்திடு மவைகளி னூலு, மம்பரு மிகமு முயிர்களும்
பரம வான்மதத் துவமெனச் சொலலா, லின்புறு மபே
த மதிபதே நிதமு மிலங்கிடப் படுமென வுணர்நீ. 43

படைப்பின் வாக்கியம் படைத்தல்செய் பரமது வாயிற்
கிடைப்ப தின்றிமெய்ப் பயனில தாகியே கிடக்கும்
படைப்பு றுஞ்சக மிவ்வணம் பரமனி னெனக்கேட்
டிடப்பெ றும்மது புருடனுக் கின்பயன் பயவா. 44

அளவறு முறைவி கார மநித்திய மெனவுஞ் சிரா
யுளவொருசத்தேமெய்யாமெனவுமொண்மறைகளாலே
யளவறு விதம தாக வறைந்திடு மதனி னூனே
விளிவில கினுக்குற் பத்தி விதேயமன் றறிய வேண்டும்.

அப்பொரு ளியா கின்றனை யெனவே யளவறு
முறையறை மொழிகள், செப்புல குதய மாத்திர விதி
யிற் செறிந்திட லில்லையெஞ் ஞான்று, விப்புரு டனுக்
குப் பரமநல் லான்ம பதவெழின் ஞானமா மிதனை,
யொப்பறு குபர வுதயம துஞற்று மப்பொழு தொன்று
மென் றுணர்நீ. 46

எவ்வுயி ருளத்தி னூடு மெழுந்திடும் விருத்தி யாது
மெவ்வவி கிருத னுன புருடனிங் கறிகு வானே
வவ்விவன் பிரம ரூப னுவனென் றெதுசொற் றேம்யா
மிவ்வண மதனைத்தாபித் திட்டன மெனவேயோர்வாய்.

மதிக்கரி சிவத்தி னின்று மகரமா வுததி மானுங்
கதிக்கறு பேத மேயெக் காலுள கடக்கம் போன்றன்
று திக்கில வதுநீ யாவா யடைவன்முன் னுரையி னேடு
விதிக்குமெவ் வண்மஞ்ஞான்று விரோதம தடைந்தி
[டாயோ. 48

இம்மொழி யஞ்ஞா னத்தை யிரித்துமெய்ப் பிர மந் தன்னைச், செம்மையின் விளக்க லாவ தன்றுசெப் பெதனி னுற்கே, எம்முபா சனையாங் கன்ம விதிபர மதனி னுனே, சம்மத வெமக்குச் சாற்றும் விரோதஞ் சற் றணுகு ருதே. 49

மின்மன முதலிற் காரண திருட்டி விதித்திடும் பிரதிமை யதனிற், றன்மதி யொழித்துக் கடவுடன் மதியை யாற்றிடச் சாற்றுமெவ் வணந்தான், றன்மய வுயிரி லவ்வணமாகத் தத்துவ மசியெனு முறையாற், சன்மயப் பிரம மதிசெய நிதமுஞ் சாற்றிடப் படுமிது திடமே. 50

அல்லதிம் மொழிக ணீயென் பதத்தினதருத்தந்தன்னை
நல்லரும் பிரமமாக நவின்றது குணவா தத்தாற்
கொல்லரி தேவ தத்த னிவனெனக் கூவிற் பிதி
யில்லெழிற் புருடன் றன்னை யியம்புவ ரெவணந்தானே

அல்லது குலிச னுகுவை யரியே யாகுவை யென வுரை தரல்போ, னல்லொரு சிவமே யாகுவை யென வே நவின்றது துதியையே நாடி, யல்லதிவ் வசனஞ் சத்துரு வதற்குத் துவம்பத வரும்பொரு ளான, நல்ல தத்துவத்தின் றன்மையே நவின்றதென்பதிற் குறை யெதோ நவிலீர். 52

அருமொழி யதனி னீயென் மொழிபறை யுயி ரெக் காலும், பரமநல் லான்ம ரூபப் பதியென்மெய்ப் பொருளே யாயிற், றெரிதர் லிலது தன்ன துருவமே னிவன்றான் செப்பீர், பிரிவறு மொழிபாற் போதிப் பித்தலே யாமெ தாலே. 53

காரண மிதனு லேயே கருதது நீயென் வாக்கு
மாருயிர் பிரம மென்னு வரைந்திட் லிலையதாலே
யாரண மொழிகள் வேறு யாதுதான் காண்லாகுஞ்
சிரவை தமையு மிந்த நெறிகொடே தெரிய வேண்டும்.



நீமொழி மொழியெ தாலே நீயது வாவாயென்னும்
தூமொழி யதற்கு வேரு மதனினுற்சொல்லும்பார்வை
நேமநற் பரம தின்ரு நிமலசத் துருவந் தானே
சேமசத் துருவ மென்னுச் செறியறி வுறுத்த லாகும்.

உளமா திகளி லம்மொழிக ளவற்ரு லென்றென்
னெலியதுவாந், தளராத் தலைமைப் பதத்ததனுற்
சாற்றுந் திருட்டி விதித்துளதாந், தெளியிவ் வசன
மதனூடெ தெரிக்கும் விதியவ் வணமிலதா, மொளி
செய் ய த னு லிவ்வுரையவ் வுரையி னின்று மன்
னியமே. 56

இரவியு மனமும் வானு முதலிய விவைத மக்கு,
வுரையவை சத்து ரூபத் தன்மையை யுரைப்பதின்றே,
பிரமத்தின் றிருட்டி யோடு பெரிதுபா சனையே செய்
யத், திரமன முதல வைக்குத் திகழவை மொழித
லாலே. 57

காக மண்ணினிற் பிறிதிலை கருத்துமுன் னது
போற், பரம சத்தினிற் பிறிதிலை யெனவத்துப் பாத்வ,
முரைய ஞற்றுவை யெப்பொழு தப்பொழு துனக்கு;
வொருப யனுமில் விதியொலி யென்றெனு மொலியே.

மனமு தலன வேற்றுமைச் சமமரு விடலாற்
பனும்வி தியொலி யென்றெனப் பகரொலி பாறி

சனகமென்றுறுஞ் சத்தொடுஞ் சம்பந்த முறுமேன்
மனமு தலன பொய்யெனப் புடம்வழங் கியதே. 59

ஆகுமேற் சிவசி வர்க்கு மதிபுட மதுவே யாகு,
மேகவேற் றுமையி னாலே யியம்பது நீயென் னீது,
மேகவேற் றுமையை யேயுமிவ்வுட லிறைக்கு மெவ்
வா, ருகுமா றில்லை சொல்லீ ரசத்தியத் தன்மை
தானே. 60

காரண மதனை யோதும் பதத்தொடு காரி யத்தை,
நேரிசை பதமு மொன்று நிலைக்கள மன்னு மாயிற்,
காரிய மதனின் மித்தைக் கருத்தது முதிக்கு மக்கா,
லேரிமண் ணிக்கு டந்தா னெனுமுறை யிவையிற்
போன்றே. 61

அளவறு முறையின் மறைகளின் மனம தாதிய
வவற்றினுக் குளதாங், தெளிசிவ மதனி னிருந்துதித்
திடுத றெரித்திடப் படுமத னாலே, களிசம மான வேற்
றுமை யாலுட் கருத்தனங் ககனமா திகட்கு, விளிவு
றும் பான்மை பொருந்துமென் பதுநேர் வெளியது
வாய் விளங்கிடுமே. 62

உலக கார ணமாகிய சிவத்தினின் றுடலுறை யுயி
ரிதிற், கிலகு மாமறை யவைகளி னுற்பிறப் பியம்பிட
லிலையேயா, மலைம னுதிவி காரங்க ளாருயி ரதுதனக்
கதனுமேல, யலைவி லாதநல் லறிஞர்க ளனுதின மய
லென வறிவாரே. 63

நோக்கும்விக் கிரகமாக நவலுமெவ் வக்கரந்தா
னுக்குமிவ் வம்பராதி யகிலத்தை யதுவேதன்னு
லாக்கிய சகத்தினூடு முட்செலு மதுதனக்கே
குக்குமச் சிவனுமஞ் சுருதிக ளோதுமாதோ. 64

உரைதரு மதனி ஞனே யுடலுறையுயிர் தனக்குப்
பிரமகா ரியம தென்னப் பிறிவுறு மதியதின்ரும்
புரையறு மெதனி ஞனே காரியம் பொருந்துருதாய்
விரிவுறும் விபின்ன புந்தி விகற்பமா யடைந்திடாதோ.

தப்பிலதை ஞலீண்டிவ் வுயிர்தனக்குத் தத்வமசி முதலி னூடு, மப்பரம வான்மபத மதனேடும் வேற்றுமைய தபின மாகச், செப்பவுறும் பொய்ம்மை யெனும் புந்தியது சிறிதேனுஞ் செறிந்துருதா, முப்புதக மெனவுலகி லுரைதருமவ் வுரைகளினி லுணரலாமே. 66

பரசிவ காரி யத்வம் பாரிலிவ் வுயிர்த னக்குத், திரமுறத் தவிரு மாறு செய்திடப் பட்ட தெத்தா, லுரைதரு மத்தா லிந்த வுடலுறை யுயிர்க்கெஞ் ஞான்றும்,பரசிவ வுருவ பேதங் கிஞ்சிலும் பற்றி டாதே. 67

சீவன் றனக்குஞ் சிவந்தனக்கு மணுமாத் திரமுந் திகழ்தம்பான், மேவுஞ் சிறப்ப திலதாகி மிளிரு மாயி னஞ்ஞான்றங், காவை யதுநீ யெனல்போல வடைவனெனவே பறைதலுறுந், தேவமறையின் றிருமொழிகளென்னே திரட்டப் புகன்றனவே. 68

உயிரொடு பரற்குத் தம்மி லுள்ளதாம் பேதமான. தபரணு வளவ தேனு மிட்டம தாகு மாயி, னுயிரொடு பரற்குப் பேத மொழிக்குமுட் கருத்து மேய, வுயர்மொழி யவைக ளாலே யொழித்திடற் கொண்ணுதன்றே. 69

எதன தெக்குணந் தன்னிடத் திவண்டன்னு லுறுமற், றதனி ஞலுள தன்றெரு பொழுதுமங் கதன்

றன், னுதிநிராகர ணஞ்செய லுரையினு விலதா, மெத னினுலந்தக் குணஞ்சக சமொடிருந் திடுமோ. 70

எதனுல் வசன மானவது மவபோ தகமா யேயாகு, மதனு லேயே வத்துவினை யயலா யாற்ற லனுகாதாந், திதிநா சமதாந் தோடபய மதனுற் றிகழ் வத் தொலிவசத்தால், விதமார் சகச குணமதனை விட லிலதென் பதுதிடமே. 71

எதனு லிவண மதனுலே யெழிலார் விடய குணம் விடய, மதனே டான்மா வதுதனிலே யறிவி லாதா னவனுலே, யதிரோ பிதமா மப்புவின்கட் பூவின் குண மா மதுபோன்றே, யதுநீ யாவா யெனுமொழிதா னதனை யழிக்கு மெனவறிநீ. 72

அதனு லேயே யவ்வசனந் திருட்டி விதியின் பர மன்ருந், துதைமா குணத்தின் வாதபர மன்று துதிவா தமுமலவா, மிதுதா னீண்டு தேகமுறை யியமா னனுக்கு பாசியெனு, வெதனுல் விதிய தியம்பவிலை யதனு லெனவே யறிவாயால். 73

உலகின் காரண மாகிய வுண்மையே யுபாதியின் வசத்தாலே, யிலகுஞ் சிவனென் ருெருபெய ரிசைந் திட லாயிடு மிதனுலீண், டுலகின் காரண மெனவுரை சத்தினுக் குயிரின தருப்பான்மை, திலக மாமறை யியம்பிட லிலையெனத் தெரிந்துளந் தெளிவாயே. 74

அணிமாதி குணமுடைய வகிலகா ரணமான வதற் குச்சிவ, னணிரூபத் தன்மையினை யருமொழியு மறி வித்தே யணுகு மாயி, னணிமாதி குணமறைவ ததனு லின் கிவற்குமித்தை யதுவே யாகு, முனர்வாயல் லது சீவ னுருப்பான்மை யிவற்குமித்தை யுளதா மென்றே.

தேசத்தனைச் சிவன தென்றறையு
நீசத்தது வென்னுமிந் நேர்மொழியா
லாசிற்றுயிர்க் கிட்டம தாங்குடும்ப
பாசத்தை யறுத்திடல் பண்ணிலதே. 76

நீயா யுள்ளா வெனும்பதங்க ளிரண்டு நேர்ந்த பினமதுவென், மாயா மொழியி னொடுமருவி யதுநீ யெனவே மலர்ந்திடுமாம், தாயோய் பெயர்ச்சொ ளொழி வினொடுந் தொடர்ச்சி யதனைத் தொடர்ந்திலகுஞ், சாயா விதனுற் சாந்தியுறும் பொழுது போகஞ் சார்ந் திடுமே. 77

இயங்கா நின்ற பெயர்தசநூ றெனினுந் தொழில திலதாகி, னயங்கான் றிடுஞ்சிற் சிறிதேனு நவிலுமாற்ற விலதாகும், வியங்கோ ளாதி யிவைகளினில் விளம்ப வுரித்தாம் விதியாதி, மயங்கா ஞானசனகம்து வெதனெ லெனவே மதித்திடுநீ. 78

நீயெனு மதனி லேயே முன்னிலை நியம மாகத்
தாயவின் முனியுஞ் சாரச் சூத்திரத் தருளி னிங்
காயநல் லதனி னீ யசியெனும் பதங்கண் முன்ன
மேயபின் னசியி னேடு மதுவெனன் மிசிர மாமே. 79

தனயன் குருவா லெஞ்ஞான்று சாற்றப் படுவ னீயாவா, யெனவிங் கென்ன வேனருளா லியம்பா யென்ன வஞ்ஞான்றே, வினவ வேட்கை தனையுறுவன் விளம்பு மணிமா தியகுணமார், கனவுண் மையதே யா வாயென் றருளுங் கருணைக் கடலுனே. 80

நீயெனுந் தொனியி னுலே நிகழ்த்திடு மதற்கு மெத்தா, லேயது வென்னும் வேத விரும்பொருட் டன்மை தன்னை, யாயநன் மொழியும் போதிப்பித்திடு

மதனி னானே, நேயசத் ததற்குச் சிவத் தன்மையை நிகழ்த்தி டாதே. 81

சீவன் றனது விந்தியங்க ளெந்த ஞான்றுஞ் சிறு விடய. மேவியலையு மியல்பாயே யதனா லிவன்றன் மிளி ருருவ, மாவவறிவ தில்லைதனா லதுநீ யசியென் மொழி யாலே. மேவவறிவித் திடப்படுமென் றுளத்தின் மிசை யே கொள்ளுதியால். 82

வெளிமுக முதலவாக வெகுமறை வசனத் தோடு முளம்விட யமதி னாவாய் நதியினி லூட்றல் போல, வுளமது தன்னா லைந்து பொறியொளி யொடுக்கல் போன்ற, வளவறு மிருதி யிதின் மானமென் றறிதி நீயும். 83

இம்மாத் திரத்திற் பேதமுள இனிய வுயிர்க்குப் பரமான்ம, சின்மாத் திரத்தி னொடுமெனவே செப்பா திதனை யொழிந்திடுநீ, நான்மாத் திரத்தை யுபதேச நவிலு முனம்பின் னனந்தலையுஞ், சன்மாத் திரத்தி னிவனபலன் றெனவே சாற்றக் கேட்பதனால். 84

விரும்பிக் குருபோதனை யான்ம விமல ஞானம், பரம்பொற் சிவத்தன்மையு மென்றும் பகைய தின் றாய்க், குரம்பைக் குளனாக்கிவ் விரண்டையுங் கூற லாகுந், தரம்பெற் றவிரகு நந்தளன் றன்னின் மாதே. 85

சத்துபா சனையு யிர்க்கு விதித்திடுந் தகைமைத் தாயே, மெத்துரைக் கருத்தமெற்கு மிளிர்ந்திடு மதனி னானே, சித்துயிர் பிரம ரூபத் தன்மையைச் செறிய வேபோ, திக்கிட விலையென் முன்னந் தெரித்தது தெளிவின் றாமே. 86

சத்து பாசியென் றிவன்மறை சாற்றுத லனக்கின், றத்து நீயென விம்மறை யறைந்திடு மதனாற், சத்து பாசனைக் கருமத்தின் விதிநசைத் தகைமை, மெத்த வேயிலை யென்பது மித்தையன் றுணர்நீ. 87

அதனினல் வரவை யெவணிருந் தேனு மாற்றிடப் படுமென வாயி, னதுபயன் சிறிதுந் தருவதிங்கிலை புன் னலைமனப் புருடனு லுஞற்று, மதுதனக் கெதனுன் மறையினற் றகைமை யனுகிட விலையா மெனவே, முதுமறை யறிபு முதுவர்தம் மொழியு முளதென மனந்தனி லுணரே. 88

இந்தநன் மொழியுந் தன்னரும் பொருளை யின்புறப் புருடனின் பொருட்டாய்ச், சந்தத மறிவித் திடுவதற் கரிய சமர்த்தமென் னின்றடா வெதனுன், மந்திர மறைய துறைந்திடா திருந்து மற்றிடத் திருந்தொரு விதியின், றந்திர வரவை யுன்றனுன் மிகவுந் தகுந்திடப் புரிந்திடப் படுமே. 89

சுருதநன் மொழியை யொழித்திவண் மீண்டுச் சுருதமி லாதகற் பனையுஞ், சுருதியின் பொருளைக் கற்றநற் றவர்கள் சொற்றசம் மதமதன் றதனாற், சுருதியிற் பிரிய முறுமரி யவனுற் சுருதியின் வதனநின் றெழலை, யரிதுற வுளத்திற் கொள்ளறெள் ளிமையா மகத்தெழல் கொளறெளி வலவே. 90

மருமறை புருடன் றனக்குவெஞ் சனன மரணகா ரணமதா யனர்த்தம், புரிதரு முடலி னகமெனு மதியைப் போக்கிச் சன் மயமதாஞ் சிவத்தின், பெருமதி யதனைத் தெரிதரத் தருகும் பிரிதரும் புருடனுக்

குரிய, பெருமித மதன்றன் பொருட்டதே யாகிப் பிறங்கிடு மெனமனத் துணரே. 91

அதுநீ யாவா யடைகுவனென் றறைபப் படுமா வாக்கியத்தாற், றிதமா யெஞ்ஞான் றறியும்வணந் தெரிக்கப் படுவ னஞ்ஞான்றே, யதமாங் காய மதி லார்ந்த புருடன் றனது வறிவிலதா, மதியா ததுமன் மடிந்திடுகு மெனவே மதியிற் கருதுதியால். 92

புருடனுக் குடற்கட் பொருந்துநா னெனுமிப் பொய்ம்மதி யதனைமெய்ம்மறைதான், றிருடம துடனிங் கொழித்தில தாகிற் றிகழ்சுக துக்கமாம் பயனை, டுருடரு மகமென் றிடுமதி யேதுவுடையபுற் கருமமார் கதியை, மருடரு பாத்தின் வசமது வாக மன்னியிங் கனுபவித் திடுமே. 93

தத்துவ மசியென் றிருமொழி பிரமங் தனதுபா சனைபுரி கரும, மெத்தவும் புகலுந் தத்துவ மெனநன் மெய்பயிக் கியமிழற் றிலதேற், பத்தியொ டரிய சத் துபா சனையைப் பயின்றிடு பவர்க்குமேற் பவிக்குஞ், சத் தியப் பலன தெத்தகை யெனவே சற்றுவி சாரமே புரிவாம். 94

மர்த்திய குண முடைய மனுடனுக் கரிய தான
சத்துபா சனையி னாலே சத்துருத் தகைமை மேவா
தெத்தகை யவனு மீண்டு வெவ்விதத் தினுந்தா னுகச்
சித்தமா கியசு பாவஞ் சிதைத்தில னெதனி னானே. 95

சத்துபா சனையி னாலே சத்துருத் தகைமை யிந் தச்; சித்துயி ரடையு மாயிற் செறிதன துருவிச் சிவன்,

மெத்தவும் விடுவ தின்றே மெய்யயிக் கியஞா னந்தா,
னெத்திறு லிருவ ருக்கு மினைந்திட லிலது தானே. 96

இயல்ப தாகிய பிரகிரு தியைவிடுத் திரதமொ
டியைபான, வயமதாயது கனகத்தின் றகைமையை
யடைந்திடு மதுபோல, நியம மாகிய சத்துபா சனே
யினு னிமலன துருவாக, நயம தார்புரு டனுமன வர
தமு நண்ணறிண் ணமதாமே. 97

இரத மும்மிக விரும்பின தவயவ மிதைமறைத்
திருந்தேபின், னெரித முலினல் லனுக்கிர கமதடைந்
திரும்பினிற் பொனின் பான்மை, யொருதிண் ஞா
னத்தை யுதிதரப் புரிந்திடு முயர்கன கமதாகக், கரு
திற் புல்லிய வயம்பொருந் துறலெந்தக் காலத்து மிலே
யாமே. 98

சுதையுஞ் செம்பொனு முதகத்தி னவயவஞ்
சுத்தவெள் ளியதாதா, மதனு றுப்பையு மறைத்தய
லறிவினை யரியவெண் பொனினூடு, முதகந் தன்னினு
முதிதரப் புரியுமிங் குண்மையிவ் வணம்போல, முதுவி
ருப்பினின் மாழையென் றிடுமயன் முழுமதி யுள
தாமே. 99

இழிபயந்தனக்குப் பொன்மைபிரதவி ரியவிபாக,
மழிபவு மழியுங் கூடு மதுமிகத் திண்ண மாக, முழுவ
தும் பிரியு மெத்தான் முதுதொழி லினிலுண் டாகு,
மழிபொரு ளகித்த மாமென் பதுபிர சித்த மாமே. 100

முன்னில தமுதத் தன்மை யிவனது முடிவின்
மூலந், தன்னுபா சனையி னுமே சாதிப்பன் வேள்வி
போல, வென்னிலத் துறக்கம் போலு மிதுமழிந்

திடுமெ தாலே, மன்னிடு மகித்தத் தன்மை செயற் கைக்கு மயக்க மின்றும். 101

ஒத்திலத் தரும மேய வுயிருக்குஞ் சிவன்ற னக்குஞ்
சத்துபா சனையினு லே சம்பந்தம் பவித்தி டாதாஞ்
சித்திரு வருக்கும் யோகஞ் செப்புத றகும்மே யென்னி,
னித்தசை யோகத் தோடு நீள்பக னின்றிடாதே. 102

பலம தித்தகை சத்துபா சனையினுற் பவிக்கு
நலபு ருடனுக் கிதையொழித் தன்னிய நணுகா
தலைகு றைவற வதுவம லருக்கபி மதந்தா
னிலையெ லையிலாத் துகளுக ளிலங்கக்கண் டிடலால்.

அவ்வுரை யதனி னுனே சத்துபா சனைய தான, செவ்விய தொழிலைச் செப்பும் விதிபரஞ் செறிந்தி டாதா, மிவ்வுட னுறு மென்று மெமதென்று மெண் ணுநின்ற, வெவ்வவி வேக மான மதியினை விலக்குந் தானே. 104

சீவனைச் சிவனைச் செப்பிடும் பதங்கள் செறிந்திடு மேகவேற் றுமையான், மேவிய சகல வுபநிடங் களினு மிளிருப தேசமா மொழிக, ளாவதிற் புகன்ற நெறி கொண்ட யறிஞ னளவினல் லுத்திக ளோடு, மோவ வில் லரிய மானம தோடு முற்றுணர்ந் தடைந்திட லரித்தே. 105

வெருவில் வேடனு லளித்திடு மிறைசிசு வினுக் குத்தன் னுதபாதி, தெரிவ தானவன் றிகழ்மொழி யெனுமித் திட் டாந்தமா மதனுலே, திரவி டாரியப் பெருபனும் தத்துவ மசியெனுந் திருவேத, மிருமஞ்

ஞானத்தை யொழித்திட லொருதலே யெனமலர்ந் துள
ஞமால். 106

யாதிஞ லிவண மதனிஞ லுனது யாக்கையில் யானென வுளதா, மேதமே மிகுந்த விருளவி வேக மென்னுமித் துன்மதி விடுத்தே, யாதுதான் பரம வக்கர மாகி யாண்டுமத் துவிதமா யிலகுந், தீதிலாக் குமர வதைநின துருவாய்த் திகழுளத் தினிற்றெளிந் திடுநீ.

மனம திமொடு கரணங்கண் மருட்டம மலவா
மனிய சத்துவ மன்றிரா சதமன்று மகியும்
புனலும் வன்னியு மன்றலே புன்சமீ ரணனுங்
கனமு மன்றுமெய்ப் பரமநற் பதங்கரு திடினே. 108

மனப்ப கையொடு மதிபொறி மற்றிரா சதத்தின்
றனிப்பெ ருந்தமஞ் சத்துவ மகிசலந் தழலின்
பனிப்பு றும்பவ மானனம் பரத்தின்பற் றிலதாங்
கனப்ப ரமவக் கரமுன துருவெனக் கருதே. 109

மதிபொ றிகளை விடயத்தி னபிமுக மருவ
விதிபு ரிந்தழி விடயங்க டம்மிலே விரியும்
புதர துதனைச் சாக்கிர மென்னவே புகல்வ
ரதுவ றிவெனக் கிலேயென வகத்தறிந் திடுநீ. 110

தடையு றும்பொறி யுபரதி தனையடைந் ததன்பின்
விடய மெய்யனு பவமதின் விரிந்தவா சனையால்
விடய மின்றியே விடயதுல் லியத்தின்புன் விளக்க
நெடும தியினர் கனவென நிதநிகழ்த் துவரே. 111

ஆசு புத்தியுட் கரணக்கு விடய வாகார
வேசி னற்பிர திதியற் றிலங்குமெத் திதத்வ

மாசு முத்தியென் றிதுதனை மலருவர் மனத்தி
ளுசை யற்றெளி ரருமறைப் பொருளறி யறிஞர்.

இவண நன்முறை முறையின்றி யியைந்திடு நனவு
மவமு றுங்கன வுறக்கமு மலமதி யதற்கா [கின்
மிவனொ ருபொழு தினுமும்மை யவத்தைக ளௌமக்
றுவமை யின்றிய துரியனு யுளனென வுணரே. 113

மூட புந்திய னுற்றணி னனவதே முதலாக்
கூடு மும்மையுங் கற்பிக்கு மதுதனைக் குறித்தே
பாடு நற்பர மான்மமெய்ப் பதமது தனக்கும்
பீடு றுந்துரி யம்மெனப் பெயரிதென் றுணரே. 114

துதிபி ரமத்தின் பதத்திற்குத் துரியம தெனவே
யெதுகு றித்தபி தானம திதுபவித் திடுகு
மதுவ சத்திய மசத்திய வதன்குண மதனுன்
மதிநி ருமித மதகரி மயற்செயன் மானும். 115

விடய மிந்தியம் புந்தியும் விரைமன மதனோ
டடை ககனம தாதிமண் ணந்தம தாய்த்தோன்
றிடனு டைச்சக மிதுவசத் தியமென மறைக
டடைய றவுப மானநற் சதங்களாற் சாற்றும். 116

தீத திவ்வுட றனையெந்த வணந்தினந் தினமும்
வாத பித்தசி லேட்டும தாதுவே வகிக்கு
மோது முற்பன முதலொழி பவதியவ் வணந்தா
னீது லகினை யெரியிர வியுமிந்தும் வகிக்கும். 117

இவணமிவ் விரவி வன்னி யிந்துவென் றுரைத்த மூன்
பவசகத் திதியி னேதென் பதுபிர சித்த மாகு [றும்
முவமையின் மிருதி வேத முலகினல் வெளிய தேது
சிவமறை யசத்த தென்னுச் செப்பிய ததனை மன்னே.

எவ்வெழிற் சிவப்பு வெண்மை கருமையிவ் வுருவ மூன்றுஞ், செவ்வழ லாதி தம்மிற் செகத்துள ரறிவர் தாமே, யவ்விது தைச சத்தோ டாப்பிய மன்ன மென்று, மூவ்வகை யவையே நித்த மெனமறை மொழியு மாதோ. 119

போன்மய மாதி யான பூடண மாதி யெல்லா
நின்மல வணிமுன் னும நிமித்தம தெனினும் பொய்
தன்மைய தாக வென்றுந் தடையற வறிய லாகு [யாந்
மின்மணி யணிமுன் புந்தி யிவண்பிறழ்ந் திடுமெதாலே.

கனக முன்மதி யதுபுரு டனுக்கெந்தக் காலு
முனிற் பிறழ்ச்சிய துடையதிங் கலவுய ரதனுற்
கனக முற்பொரு ளபிமதங் கருதுசத் தியமாய்
நினையி வைதமில் விபர்யய மதுவிலை நீயே. 121



அணியாதி சமந்தழ லாதிய தாம நித்த
குணமாமத னுற்சுட ராதி குலா விடுங்கா
ரணமா மருணதிய மூன்று மநித்த மின்றுந்
துணிவாற்கன காதிய தோடு துலிய மாமே. 122

உவமான மிதுகொடு தீயுடு நாத னேடுஞ்
சவிதாவெனு மூன்றற் கநித்த மறைகள் சாற்றுந்
துவராதிய மூன்றற் கநித்தமி றாய்மை யுஞ்சீர்
நவமாகிய நான்மறை நாளு நவிலு மாதோ. 123

அனலாதிக் கநித்தியம் யாது மறைக ளாடும்
பனுமீதத னற்றிருட் டாந்த மதாய்ப் பவிக்கு
நனிகாரியம் யாதுமெஞ் ஞான்று மநித்த மோத்தின்
கனமாந்துணி வாலது போன்றல காரணந்தான். 124

புடவை தனக்குப் பொய்ம்மைதனைப் போதித்தி டும் வேட்கைய னூலின், மடிய னுறுங்கா ரியமதனை மருவா தொழிக்கு மதுபோல, நெடிய நாலின் சம மாகி நிகழுமுன்றை நிலைநி றுத்திக், கொடிய கனலா தியவதற்குக் கூறுமறைக ளொழிவி னையே. 125

மேதினி யாதி யாக விண்வரை யபர மான
விதுயர் பரத்து டைய காரிய மென்ன லாகும்
யாதினு லபர மாகுங் காரிய மழிய லாகும்
யாதினுற் பரம தாகுங் காரண மழியா தாமே. 126

ஆதலாற் பிரம மான சத்தசத் தாத லின்றும்
பேதமா மன்னி யங்கள் பெட்டெனல் சித்த மாகு
மாதலா னுதய முற்ற சகமசத் தென்ன முன்ன
மோதிய தென்னு லீண்டுச் சித்தமுற் றதுநீ யோரே.

முனம்பு கன்றிடு மேதுவி னுன்முளைத் தெழுந்த
மனந்த னக்குமசத்தியத் தன்மையே மருவு
மனந்தி னம்புரி சரிதமும் பொய்ம்மையாய் வயங்கு
மனங்கு யிற்றிடு மதகரி மயற்செயன் மானும். 128

ககன மாதியி னின்றறி வினினின் றுங் கருத்தி னுக் கரும்வேத, மிகவு நீள்பிறப் பறைந்தில தாதலா லெவ்வித மதனுலே, புகும காமன மிதனது வசத்தி யப் புந்தியுற் றிடல்கூடும், பகவ னேமிக வுறுதிய தா மெனக் கருளொடும் பகர்வாயால். 129

சாந்தோக் கியத்தின் சத்தமத்திற் சத்தாம் பிரம மதினின் றும், போந்த பான்மை மனந்தனக்கு முயிர் ப்பி னேடும் புகன்றிடலாற், சாந்த மாகுங் காரியத் தின் றருமம் வாய்ந்த மனமிதற்கே, காந்தியான மெய்ம் மைபது மெவணம் பவிக்கு கழறுதியால். 130

கரணம்முயிர்ப் பதனோடுநுண் சகனுதியி னோடுந்
தெருணற்பர மான்மாவெனத் திகழும்புரு டனினின்
றுருணும்மன முதிதம்மென வுயர்முண்டக மொழியும்
பொருணுங்கிடு மனமாதலிற் பொய்யாமென வுணர்நீ.

மனமோவன மைப்பான்மைய தெனவேமறை
மொழியு, நனியாதலி னுலேயுட லதுபோலநற் றிட
மாய்க், கனபூதமென் னதன்காரியங் கசடேயற வுறலா,
மனமானது வதனுன்மலி பொய்யாமென மதிநீ. 132

ககனுதிய வுதயஞ்செறி யிவையாவையுங் கருதி,
அகுமா பொய்ம்மை யெனுமீதினைப் பிரதிஞ்ஞையென்
அனுற்ருய், தகுமீறினின் முதலில்லிலே யெனவேதுவ
தாகும், புகுபூடண மதுபோலெனல் புகல்வாயுவ
மமெனு. 133

கனகந்தனி லெழுபூடண முனமுண்டல கருதிற்
பினுநன்முடி வதிலிங்கிலே யெனபேரிழு தையதே [ஞ்
மனுமிவ்வழி தனினும்மிதை மானும்மிவை யெவையா
சனிதம்பெறு நபமாதிக டடையில்லசத் தாமே. 134

கனகாதியி லுளதாகிய களிபூடண முதமுன்
பொனின்வேறென வுளதாயிடிற் புகலும்பரி மாண
நனிகூடிட லிலதேனிவை தமினுடிடி னலமாய்ப்
பனல்வேண்டிடுந் தடைபொன்றறப் படிமீதிது தனே
[யே. 135

கனகாதியி லுளவாதலிற் கனகாதிக டமின்வே
றெனவேயணி முதலாயன வுளவேயில் வெதனுற்
றனிமேயகன கமதாதிய கொளலே தகவிலதா
லெனகாரண மதுவேநிச மிதில்வேறிழு தையதே. 136

தருகாரண மதினுமமொ டுருவந்தனி னேடும்
விரிவேறென வுளதாகலின் விளைகாரியம் வேறே
யிரிகாரிய முறுகாரண மிதின்வேறதிங் கிலதா
மருமாமதி யெங்ஙன்னுள ததுவாமிதை யறைவிர். 137

ஈண்டு விரணந் தந்துபொன் மண்ணொனு மிவையே, நீண்ட பாய்பட மாரமுங் குடமதாய் நிகழக், காண்ட லாயது வுலகராற் கண்டிடு மதனல், வேண்டு காரணங் காரியம் வேறில்லை யறிநீ. 138

காரண மதனி னின்றுங் காரிய மனிய மின்றேற்
பேருரு வாதி யாய பேதமும் பொருந்தா தென்ன
வூருன துணர்வு வாளா வுறுமுல கினர்க ளாலே
காரண மண்ண பேதங் காணலாங் காட்சி யாலே. 139

உருவமு நாமந் தானுங் காரிய மொருந டற்குத்
தெரிவது வேற தாயு நடன்றிக ழனிய னென்னு
மருவுத லேனின் றென்றே வினவிடின் மதிய ராலே
யுரியவுத் தரம திதை யுரைத்திடல் கடனதாமே. 140

சத்திலதிற் கெவ்விதமுஞ் சனனமது சம்பவியா தசத்த தாலே, சுத்தவிசும் பின்குசும மதுபோலத் தோற்றமுள பொருட்குத் தானு, மெத்தவுற விலதாகு முனமேயே மிளிர்வதனு லான்ம னேபோற், சத்தது தா னிட்டமதா மதனுற்சத் தசத்தினுக்குச் சனன மின்றே. 141

கபிலரொடு மாசுரிபே பஞ்சசிகா திகளாலே கழற லான, சுபமதத்தைக் கிரகணமே புரிந்திதனைச் சொல் லுவா னொருவன் றானுஞ், சபதமிது வொருபொழு துஞ் சத்ததற்குச் சனனமது சாற்றே னெந்த, நிப

மிலதாந் தத்துவமும் யானுரைப்ப நீனிவினொடும் வினவுவாய்நீ. 142

காரண மதனி லொருசிறப் பிலதாய்க் காரிய மெது விருந் ததுதான், பூரணச் சிறப்பைப் பொருந்தியிப் பொழுது புகலது வேபோலிந் திலங்கு, மேருள விது வெக் குற்றமு மற்றே யுளதென வெனக்கிலங் கிடு மாஞ், சிரிதிற் குறைக டெரிந்துளை யாயிற் செப்புதி மெய்ப்படத் தெளிவே. 143

உள்ளகா ரியமெக் குணத்தொடுந் தொடர்ந்தே யொளிர்ந்திடு மிந்தஞான் றெழியாத், தெள்ளுகார ணத்தின் முனமந்தச் சிறப்புச் செறிந்துள தோவில தோநீ, விள்ளுவாய் சிறப்ப துள்ளதே யெனிலோ வியன்பிர கிருதியின் முனமே, கொள்ளுமிஞ் ஞான் றுஞ் சிறப்பொடுங் கூடுந் தகைமைய தசத்ததாய்க் குலவும். 144

அக்குண முனமே பிரகிரு தியதி லணுகிடா தென வறை தருகிற், பொக்குறு மசத்த தேயுதித் திடுமென் பொவியுனக் கபிமத மாகு, முக்கிர வுதய மதுதனு லேயே யுண்மையை யுற்றகா ரியக்குத், தக்கநற் சனன முடைமையா லேயே தவிர்ந்திட லாதலுக் தகுமே. 145

உன்னபி மதமிது வொழிக்க யாவர்க்கு
மின்னுறு வலியிலே யெனுமிவ் வேதுவாற்
பன்னுவை சேடிகர் மதத்தைப் பையவே
மன்னுறு முனதபி மதம தீதுமே. 146

சத்தழிந் திடும சத்துச் சனித்திடுங் கணுத மார்க் கஞ், சுத்தபண் டிதர்க ளாலே சொல்லிடப் படுமி

தென்றே, புத்தியின் விருத்த மாமென் றுரைத்தன ரதனை மேலோ, ரத்தகை விருத்த மாமென் றுனுமே யறைந்த தன்றே. 147

தேசுறு பிருதை பெற்றவுத் தமற்குத் திகழித மருளினுற் றெரிக்கு, மேசுறு மசத்திற் குண்மைய தில்லையென் றியம்பிடு மிவ்வரு மொழியாற், றேசிக ரெவர்க்குந் தேசிக ரான திருமரு மார்பனுற் கணுதன், பேசுறிம் மதமு மதிநிடே தமதாய்ப் பேசிடப் படு மென வுணர்நீ. 148

சத்தொடு மசத்தி னுக்குச் சன்மஞ்சம் பவித்தி ட்டாதென், றுத்திக ளொடுமெம் மான்முன் னுரைத் திடப் பட்ட தாகுஞ், சத்தசத் ததுவுஞ் சன்மந் தழு விலை யில்லையெ னென்னி, னத்தகை வத்து வொன்றிவ் வகிலத்து ளில்லைய தாலே. 149

சத்தசத் தனைத்க டந்திங் குளமுத றமக்கின் றுகு
மத்தொரு நிலைமை யெத்தா லத்திறு லேமை ஞதி
சித்திரக் குதய மின்று மென்பதிச் செகத்தெ லார்க்கு
மெத்தவேத் தியம தாகு மிளிரநிர் வசன மாமே. 150

நும்மத மதிவி வைக்கு நவல்வகை யெதனி ஞனுஞ்
சன்மம துளதா மென்னிற் சத்தசத் தாச ரித்தே
யிம்மன மாதி கட்கிங் காயினு மெய்ம்மை யின்றுஞ்
செம்மறை யிதற்கு மித்தை செப்பிடு மதனி ஞலே.

மறையான்மன திற்குப்பொய்த் தன்மை மலர்ந்ததாலே
புறைமாமன தின்சரி தங்களு முண்மை யன்று
முறையேபொய் புளச்சரி தங்கள தாத லான்முன்
னறையாங்கதன் சித்திய தாகி யமரு மாலோ 152

எம்மும்மையை நோக்கி யிரும்பர மான்ம வின்பச்
செம்மைப்பதந் திற்குத் துரியநன் ஞமஞ் சேரும்
பொம்மும்மவை பொய்பரும் பொய்யின்குணமெதாலே
விம்மும்மதி கற்பித சர்ப்ப விசர்ப்ப ணம்போல். 153

நிகமத்தொடு முத்தி பலத்தினி னின்று மென்னு
லகமுற்பொரு ளாமுல கிற்குப்பொய் யான தன்மை
புகலுற்றிட லாயது முன்னம் பொலிபு மொன்று
மகிமைப்பர மக்கர மேசத் தசத்து மற்றே. 154

காரண மிறந்த பாகிய மாகிக் கருதனந் தரமதா மெதுதா, ஞேதது தனக்கிங் கபரமொன் றேனு முண்டென விலையென மிகவும், வேதமெய்ம் மொழிகள்விளம்பிடு மெதனு லதனிஞன் மெய்ப்பொரு ளான, நாதநஞ் சிவத்தை பொழிந்திவை யெவையும் பொய் யென நன்கிலங்கியவே. 155

பரமதன் னதனின் வேறும் பாகிபாந் தரங்க ளிக்கி, யருமறை யான்மா விற்கிங் கவபோத கனாநற் பான்மை,யொருபுனற் பிறந்தவுப்பவ் வுதகமா முவமை யாலே, யுரைபுரிந் திடம தாலே யொழிந்தன வசத் தென் றோரே. 156

விரைவிற்றன் னதனின் வேறும் விடயங்கள் விடுத்த லாலே, திரைபுனற் பிறந்த வுப்புத் தெள்ளறற் சமமதாய்ச் சொற், பரவிஞ்ஞா னகன மான பரமநற் பதத்தை நீதா, னுரையது நானே னெனென் றுணருதி யுளத்தெப் போதும். 157

அணுவுமன் றதனின் வேறு மருங்குண மன்ற தேபோற், றுணிகுறை வன்று நீட்சித் தொடர்ச்சியு

மன்ற தாகிப், புணருமெச் சிறப்பும் போக்கிப் பொலி
தரு பரம மான, றணியவக் கரத்தை நின்றன் னுருவ
மாய் நோக்கி வாழ்வாய். 158

புத்தியில் லுலக ராலே பொலிகரித் தரும மாயே
மெத்தவு மருவ லான மிளிருயிர்ப் புடல் தோடும்
புத்தியின் குணம தான வாறையும் போக்கிப் பையப்
புத்தமென் கரியே நானென் றுணருதி நீயெப்போதும்.

விடுவதன் முன்னந் தன்ன துருவமாய் விடக
ரந்தா, னுடனுறை கஞ்சு கத்தை யுணர்ந்தது தனது
புற்றில், விடதரங் கஞ்சு கத்தை விடுத்தபின் னருமே
நோக்கி, மடுதன அருவ மாக மனத்தினி னினைத்தி
டாதே. 160

பனகம துறழ நீயும் பழியுட லிதனை நாளு
முனதுரு வெனவு ணர்ந்தா யுள்ளுணர் விலாத காலே
யுனுமறி வுருவே யுன்ன துருவம தாயு ணர்ந்தே
வினையர வியைய நீயும் விடுதியிவ் வுடலைத் தானே. 161

இரவியிலீ தொளியி னேடு நிரந்தர மியைத லாலே
யிரவிக்கிங் கிரவி னேடும் பகலதுண் டாத வின்றே
திரவுணர் வதனி னேடுந் தெரியாமைக் குணங்க டாமு
மிரவியை நிகர நித்த வறிவுனக் கிலையென் றோரே. 162

பரிசுத்த விபுத்த மாகிப் பரமுத்த வறிவ தான,
வொருநித்த வெனக்கு ஞானஞ் ஞானம தொழித்த
தாலே, யிருபத்த மோக்க மென்னுங் குணங்கள் திலை
யெப்போதுந், தரிசித்த மதனி னென்றே தாற்பரி
யர்த்த னுலே. 163

அறிவுரு வெனக் கென்னாலே யன்னிய னாலே நீக்கல், குறியோடுங் கோடல் கூடா குவலயத் தெவர்க் குந் தம்பாற், செறிதரல் கரும மான தின்றுசெப் பெனைய லாதே, நெறிபுரி யனியன் வேறு நிகிலத்தி லிலைய தாலே. 164

சரவசர தேகமதிச் சரிதங்க டமதுடைய
வொருகரியிங் கெப்பொழுது முயர்நானே யாவனெனுந்
திரமதனு லென்னைவிடத் திகழனிய னிலையென்றே
தெரிகுதிசு மேதையாய்த் திடமாக விதைநீயே. 165

விமல விண்டலந் தனிற்சல தாதியால் விரித்த
குமல முண்டிலை யென்னினும் பேதங்கூ டிலைபோ
லமைப ரிசுத்த மாகியெங் கணுநிறை யறிவா
முமிற் றுவிதபே தமதுஞற் றுறுபிரி விலையே. 166

முன்னம் புகன்றோந் துவிதமது முற்று மூன்று காலமுமின், றென்ன விவகா ரந்தனையே யினிது நோக் கி யிதையிசைத்தே, மன்ன வுளதாம் பொருண்மருவா மாய மான பொருளுடனே, பன்னு கழுதின் றோத னிற் பரந்த நதிபற் றிடலிலதே. 167

பலவிதம் பகர்ந்த தாலே பயனதென் னுளது கேணீ, நலவிதிற் சுருக்கநிற்கு நவிலுவ னுனதிடத்தே, யிலகிடு நனவ காதி மும்மைப தெந்த ஞான்று, மலை செய்கற் பிதம தென்னு வசத்திப மதுவே யாமால்.

மனமென மலர்ந்த தூஉமின் மகிழுன திடத்தி லேயே புனையுங்கற் பிதம தென்னைப் புகழ்மறை யூகத் தாலே துனிபசத் திபம தென்றே தொகுத்தன மதனி னானே யுனை பொழிந் தனியம் யாது முளதிலை யுறுதி தானே.

பாகியாந் தரம தற்ற தெதுபகர் துவித மற்ற
தேகமா ரசம தற்ற தெதுசிறப் பெவைபு மற்ற
தேக்குகா ரியம தோடு காரண மற்ற தேது
வாகறி வுருவ னந்த சத்திய வதுநீ யாவாய். 170

இம்மாத் திரமே மறைமுடிக ளவற்றி லெழிலாம் பரமபத, மெம்மா லறியப் பட்டுளதிங் கிதனி லதிக மிலதெனவே, தம்மா லருளப் பட்டதைவிட் டனிய மதியைத் தவிர்த்தி டுவான், பெம்மான் பிப்ப லாத னெனக் குரவர் பெருமான் பேசினனே. 171

சீடனுங் குரவற் போற்றிச் செறியின்ப துன்ப மான
வாடலே பிறப்பி றப்பா மறலுறிவ் வரியை ஞான
வோடம தாற்க டத்தி யொழித்தனே பகவ னேநீ
மூடனே யெனவே நின்று மொழிந்தன னன்பி னோடே.

ஒப்பிலாக் கிருத கிர்த்ய னுபேட்சக னொரும னத்தோ
னிப்பொழு தான்ம ராம னிசைநிரு விருத னானே
னப்பெனக் கான லூடிவ் வழிவிட யமதை நீத்தே,
யிப்புவி யதனி னின்னே டிருந்துசஞ் சரிப்ப னையேன்.

ஐபத்தா லுடலின் றுரணை யடைந்தம் மாறெனும் பகமடைந் தவனே, மெய்மைத்தான் விழுத்தும் வரை யினு நினது மெய்யடிக் கேவலே நிதமுஞ், செய்பத் தான் முயல்வ லென்றனு லிதனைச் செய்திடக் கூடுநின் றனக்குச், செய்யத்தான் வேறென் றென்றனுன் முடியா சிற்பர விப்ரேச கரனே. 174

நன்மா ணுக்க னசிரிய னுடு கதையின் சிரவணத்தா, லெம்மான் மறையை யனைபமறை யினிய சார சமுத்தரண, மென்மா விதுவிவ் வளவியற்ற லாயதிதனை

யெவனுணர் வான், வன்மாய் வுதய நீராழி மாட்டு விழுவ திலையவ்னே. 175

குருபரன் றனது பத்தியை யடைந்து குலவிடும் பகவந்த ராலே, யொருவிதைப் பயிலத் தக்கதிங் கிவரை யொழிந்தவ ரோதுதல் கூடா, குருபர னன்பன் றனக் கெத ஞலே குருவருள் பொருளிலங் கிடுமா, றெரியத ஞலன் னியத்தினைச் சேவித் திடுபவன் சிரவணம் புரி யேல். 176

குருபரன் றனக்கன் புடையமா புருடர் தமக்கருங் குருவினு லருளு, மொருபொரு ளொளிரு மெனமறை யதுவு மோதிய தெவற்கென முதலா, யருமது தனிஞ லருளிறை யடியை யகம்புறந் தொழுதிடு மவராற், றெரிதர விதனைக் குருபர னருளாற் றெரிந்துகற் றிட ஏகுந் திடுமே. 177

எம்முடைய பிறப்பிறப்பின் சந்தானத் தாடு
மியல்புடைய மனவேது வானவிரு ளதுதா
னெம்முனிவ னுளவிரவி யொளியாலட் டதுவா
யேகாந்த நாசமடைந் திடிஞ்சுருதி புகலுஞ்
செம்மைசம விநயமதாற் செறிந்தொளிருஞ் சிடத்
திருக்கூட்ட மெவ்விறைவன் பதமடையக் கணமே
வெம்மையறும் பதத்திருக்கு மெதிவரர்க டொழுமவ்
விமலகுரு பதமாயு ளுளவளவுந் தொழுவாம். 178

எவ்விறைவன் சிரந்துறக்கம் வதனமனல் விழிக
ளிரவிமதி செவிதிசைக ளுயிர்ப்பாவி யுதர
மிவ்விசும்பு வாத்தவிய நதிபதிய தாகு
மெவருள்ளுள சுரநரர்கள் ககங்கோகந் தருவர்

தவ்வரவு தயித்தியரா லனந்தவித மாகத்
தரும்விசுவ மதிசயமாய் ரமித்திலகுந் தானே
யிவ்வுலக மும்மைமையும் வடிவாக வுடைய
விசனேனு மத்தகைய விண்டுவைவாழ்த் துதுமே.



விக்கின விருட்கு வெய்யவ னாகி விக்கின வனக்கு வெவ் வெரியாய், விக்கின வரிக்குக் கலுழன தாகி விக்கினக் கரிக்குவெவ் வரியாய், விக்கின வரிக்குக் குலி சம தாகி விக்கின வரிக்குவ டவையாய், விக்கின மொழிக்கச் சமிநிழ லமர்ந்த விக்கினேச் சுரன்பதம் பணிவாம். 180

வேத சார சமுத்தரண மெனவே விசுவ குருவருளா, லோது மிதனைத் தமிழ்மொழியி னுரையா டினனென் னுளநாண, நாத வீர வாரியனே நல்ல குழவி மொழியெனவே, நீதன் னுளத்தி னுகந்தருளி நிலையி லேனுக் கருள் புரிவாய். 181

வரழிசிர் வல்ல பத்தில் வனிநிழ லமர்ந்த வள்ளல்
வாழிமான் மருகன் வாழி மதமுனி பணியும் வள்ளல்
வாழிநன் முத்தி ராம வள்ளலுக் கருளு மெந்தாய்
வாழிமா வீர வீச னடியவர் வாழி வாழி. 182

முற்றிற்று.



# புத்தக விளம்பரம்.

| | |
|---|---|
| ஸ்ரீபகவத்கீதைத் திரட்டு குறிப்புரையுடன் (புதியபதிப்பு) | 1 0 0 |
| திருவாசகம்-பாக்கெட்ஸைஸ் ... ... ... ... | 0 10 0 |
| தாயுமான சுவாமிகள் பாடல்-பாடபேதத்துடன் | 0 8 0 |
| நவநீதசாரம் (வினாவிடை) ... ... ... ... | 0 8 0 |
| வேதாந்தசாரம் ,, ,, ராப்பர் | 0 10 0 |
| திருக்குறள், பரிமேலழகருரை, தெளிபொருள் விளக்கம், கருத்துரை, குறிப்புரை. 2 வாலியம் | 6 0 0 |
| வாக்கியசுதையென்னுந் திருக்குத் திருசியவிவேகம் மூலமும் உரையும், சம்ஸ்கிருதமொழிபெயர்ப்பு | 0 2 0 |
| சித்தாந்தபிந்து ... ,, ,, ,, ராப்பர் | 0 8 0 |
| வேதாந்தபரிபாஷை ,, ,, ,, ,, ,, | 0 10 0 |
| அத்துவிதவுண்மை-பாக்கெட்சைஸ் ... ... | 0 1 0 |
| நானாஜீவவாதக்கட்டளை-குறிப்புரையுடன் ... | 0 4 0 |
| தருக்கபரிபாஷை-குறிப்புரையுடன் (புதிய பதிப்பு) | 1 0 0 |
| பாட்டியற்கொத்து-உரையுடன். இதில் வச்சணந்திமாலை, சிதம்பரப்பாட்டியலின் பொருத்தவியல் மரபியல், நவநீதப் பாட்டியல் அடங்கி யிருக்கின்றன. ... ... ... ... ... | 0 6 0 |
| மோட்ச சாதன விளக்கம் ... ... ... ... ... | 2 0 0 |
| சர்வதரிசன சங்கிரகம். (இதில் உலோகாயதமதமுதல் வேதாந்தமதமீறாகப் பதினாறு மதங்கள் நிரூபிக்கப் பட்டிருக்கின்றன). சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு | 2 0 0 |
| அறிவானந்த சித்தியார் ... ... ... ... ... | 0 4 0 |
| சமயபேதநிராகரணை சங்கிரகம் ... ... ... ... | 0 1 0 |
| விவேகசூடாமணி-பாக்கெட்சைஸ் ... ... ... | 0 8 0 |
| சிவமகிம்நஸ்தோத்திரம் சம்ஸ்கிருத மொழிபெயர்ப்பு | 0 1 0 |
| தோத்திரக்கொத்து ... ... ... | 0 1 0 |



(...ஜ் பிரத்தியேகம்).

கோ. வடிவேலு செட்டியார்,
தமிழ்ப்பண்டிதர்,
கோமளீசுவரன்பேட்டை, சென்னை.